[17th February 1959

THE HON. SRI M. A. MANICKAVELU : இதைத்தான் நான் முன்னமே சொன்னேன். இந்த திட்டத்தை இன்னும் தீவிரமாக அமுலுக்குக் கொண்டு வருவதற்கு என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பது பரிசீலனையில் இருக்கிறது என்றும் சொன்னேன்.

*Hydrographic survey*

* 405 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) whether any hydrographic survey was made recently;

(b) if so, what are the findings; and

(c) if not, whether there is any programme for hydrographic survey?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir. Hydrographic surveys of Cuddalore Port, Nagapattinam Road-stead and Tuticorin Port have been carried out by the Hydrographic Department, Indian Navy, between March 1955 and February 1958.

(b) While only a draft survey plan of the Cuddalore Port has been received by the Port authorities, the charts for the Nagapattinam and Tuticorin ports are still awaited.

(c) A survey of the Pamban Pass has been recommended, but in view of the dearth of survey vessels with the Indian Navy, this work has been assigned only a low priority by the authorities at the Centre.

SRI K. SATTANATHA KARAYALAR : கொளச்சல், லீபுரம், கன்யா குமரி போன்ற கன்யாகுமரி மாவட்டத்தில் பழைய காலத்திய துறைமுகம் இருக்கிறது. அந்தத் துறைமுகத்தை நல்ல நவீன முறையில் அமைப்பதற்கும் இந்த சர்க்கார் மத்திய அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்யுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அந்தத் தகவல் என்னிடம் இல்லை. தனியான கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : எக்ஸ்ப்ரஸ் பஸ்கள்...

MR. SPEAKER : அது அடுத்த கேள்வி.

SRI A. GOVINDASAMY : கடலூர் துறைமுகத்தை எந்த முறையில் விஸ்தரிக்கலாம் என்று சர்வே செய்தவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அந்தத் தகவல் இப்பொழுது என்னிடம் இல்லை. தனியாகக் கேள்வி கேட்க வேண்டும்.

SRI N. MARUDACHALAM : கோவை ஜில்லாவில் மேற்கு தொடர்ச்சி மலையிலுள்ள வெள்ளியங்கிரியில் ஒரு நீர்வீழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அதைப்பற்றி ஏதாவது பரிசீலனை செய்யப்பட்டதா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : இந்தக் கேள்வி எப்படி எழும் ?

THE HON. SRI P. KAKKAN : இது அந்தக் கேள்விக்கு சம்பந்தப்பட்டது இல்லை.